உ

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

ஸ்ரீமகாபாரதம் ஆரண்யபர்வத்தில்

ஒரு பாகமாகிய

# மாம்பழக்கொம்மி.



இஃது

மாயவரந்தாலூக்கா தேரெழுந்தூர்

அம்புஜத்தம்மாள் அவர்களால்

இயற்றியதை

கும்பகோணம் புஸ்தகஷாப்

கே. வி. கதிர்வேல் பிள்ளையால்

பார்வையிடப்பட்டு

பெரம்பூர்

ஆறுமுக முதலியாரால்

சென்னை-சூளை,

பால விர்த்தி போதினி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1915.

உ

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# மாம்பழக் கொம்மி.

## 1-வது கட்டம்.

சிதம்பரக்கொம்மி - மெட்டு.

நம்பிபணிந்து கொம்மியுரைக்க – அந்த
தும்பிக்கையாழ்வார் துணையாக
அம்புவியில்பஞ்ச பாண்டவர்செய்த - நல்ல
மாம்பழக்கொம்மிக் கருள்தாரும்.

ஐந்தாம்வருஷம் சைந்தவமாரிஷி – இந்த
அற்புதவனத்தில் பாண்டவரும்
விந்தையாயுலாவி வரும்போது - அங்கு
வேடிக்கையாகக் கனியைக்கண்டாள்.

ஐவருங்கூடி யிருக்கும்போது – வில்
அர்ச்சுனனைக்கண்ணால் ஜாடைசெய்து
உய்யவேமாங்கனி பார்த்தவதிசயம்
உத்தமிதானுமே சொல்லலுற்றாள்.

பாஞ்சாலிசொன்ன மாங்கனியை – யதை
பார்க்கதனஞ்சயன் காட்டச்சொல்லி
வாஞ்சையுடனே யழகைக்கண்டுமவர் - இது
வானுலகபழ மாகுமென்று.

உச்சிக்கிமேலே எத்தனைதூரமும்
உயர்ந்து இருக்கும் கனியதனைப்
பட்சமுடனே பறித்துத்தாரேனென்று
பாங்கினி,வாடியென்று நடந்தார்.

## 2-வது கட்டம்.

(திரௌபதை அர்ச்சுனனை மாம்பழம் பரித்துத் தரச்சொல்வதும் அர்ச்சுனன் பரிப்பதும்.)

பச்சைமலை பவளமலை - மெட்டு.

தனஞ்சயனே வனமதனில் தானழைத்தேன் வாரும்
தையல்கண்ட மாம்பழத்தைச் சறுதி பரித்துத் தாரும்
மரத்திலிருக்கு மாம்பழத்தை மன்னவனும் பார்த்து
மயங்கிபிது வெகுதூரத்தி லிருக்குதென் றேசித்து
எவராலு மிதைப்பரிக்க வியலாது என்று
இசையுடனே வில்லெடுத்து அம்புதன்னை பூட்டி
மந்திர தீபமிட்டு வாங்கிவிட்டார் கனிமேல
அந்தரத்தி லிருந்தபழம் அருந்துவிழுந்த தங்கே
திரௌபதையு மர்ச்சுனனும் தூக்கியதைப் பார்த்து
தூக்காத மலைகள்போல இருக்குதென் றேசித்து
கன்னியேகேள் துரௌபதையே கடிகினிலே சென்று
காளையான வீமன்தன்னை கருதியேநீ யழைப்பாய்
அழைத்துவாறே னென்றுசொல்லி அம்பிகையும் சென்று
ஆணழகன் வீமனைத்தான் அன்புடனே கண்டு.

## 3-வது கட்டம்.

(துரௌபதை வீமனை அழைக்க வீமன் வருவது)

சங்கரனே சங்கரனே - மெட்டு.

வெற்றிமத யானையெனும் வீமனெனும் மன்னவனே
உத்தமனர் உங்கள்தம்பி யோடோடி யழைக்கச்சொன்னா
கண்மணியே பாஞ்சாலி காரிகையே நான்வாறேன்
நன்மணியே யிவ்வனத்தில் நாடுமிட மெதுவோதான்
இந்தநல்ல மாம்பழத்தை யெவரெடுப்பார் கையாலே
அந்தமுட னசையவில்லை யாராலு மாகாதே
அண்ணனர் தருமரைதா னறியாமல் வந்ததினல்
என்னவினை வருமோநா னேதுமறி கிலேன்மாதே
தம்பிநகு லனையுஞ்சகா தேவனையு மன்புடனே
அம்புவிழி மாதரசே யழைத்துவா வரைநொடியில்

## 4-வது கட்டம்.

(துரௌபதை நகுல சகாதேவரை அழைக்க அவர்கள் வருவது.)

மார்சழிமாதம் - மெட்டு.

மன்னநகுல சகாதேவரே உம்மங்கை சரணமையா
அண்ணனுகிய வீமனர்ச்சுன ரும்மை யழைத்துவரவே சொன்னர்

வாருங்களென்று வருந்திதெண்டனிட்டு வனமார்க்கமாக
வந்துமேபைந்து பெருமேகனியை வாரியெடுத்துப் பார்த்தார்

மலைபோலிருக்கும் மாம்பழந்தன்னை மாற்றவுங்கூடவில்லை
கலைகளுமுணர்ந்த அண்ணன் தருமரை கடுகியே யழைத்துவாராய்

மெத்தபயமாய் மெல்லியே யிருக்குது மேலவர் கனியாமே
சித்தஞ்செழிக்க உத்தம அண்ணனை இத்தருண மழைப்பாய்.

## 5-வது கட்டம்.

(துரௌபதை தருமரை அழைக்க அவர்வருவது.)

பொன்னர் மேனியனே — மெட்டு.

ஓடி நடந்தனளே யொரு நொடியில் வந்தனளே
நாடி பணிந்தனளே யென்நாதாவென் றழைத்தனளே

விஜயரு மாங்கனியை வில்லாலடித்தனரே
அசையா பெருமலைபோ லானதே வப்பழந்தான்

எடுத்தா லெடுபடலை யவரெய்த மாம்பழந்தான்
விடுத்து அழைக்கச்சொன்னர் விரைவாய் நடந்துவாரும்

தருமராஜதுரையே தயவுவெய் யுன்பிறையே
கருதும் வினையதுவோ யிப்போ கனியாக வந்ததையா

ஆருண்ணும் மாம்பழமோ அதையறியாமல் கொய்தீர்களே
எவருண்ண வைத்ததோநாம் ஏதுமறியோமே

சப்தரிஷிகள்தானோ சன்யாசியானபேரோ
அப்ரஸ்திரீகள் உள்ள தேவரய்ய னிந்திரனதோ

கைமோசம் வந்ததையோ கடுகி தருமருமே
ஐயோ வென்றலறி அரி மாதவனை நினைந்தார்.

## 6-வது கட்டம்.

(தருமர் ஸ்ரீகிருஷ்ணபகவானை துதிப்பது.)

பாரோ ரங்கா — மெட்டு.

ஆதி மூலமென்ற யானையை முன்னே
ஆதரித்த மாதவப்பொருள்
ஐயா வாருமே ஆ—ஆ—கிருஷ்ணா
அண்ட மளந்த அமர ரிடர்தீர்த்த
வைகுண்ட பதியே வருவீர் கெதியே
வணங்கினே னையா ஆ—ஆ—கிருஷ்ணா
ஏழை பங்காளா யெழுந்தருளும்
தாளை பணிந்தேன் தயவருளும்
இது சமையமே ஆ—ஆ—கிருஷ்ணா.

## 7-வது கட்டம்.

(ஸ்ரீகிருஷ்ணபகவான் தருமரிடம் எழுந்தருளுவது.)

பூமிமெச்சிடும் - மெட்டு.

பாண்டவர் வருந்த காண்டீபன் தன்னாலே
ஆனதே—வினைவேணாதே—மனம்தோணாதே
தாண்டி னடந்துதான் கார்க்க கண்ணனும்
வாராரே அருள் தாராரே.

காடு மலைகள் கரிய மலைகளை
தேடியே-வனம்நாடியே—அங்குஓடியே
பாடுபட்டுப்போகும் பாண்டவரைக் கார்க்க
வேகமாய் தப போகமாய்

ஐயன் வருவதை ஐந்துபேருங் கண்டு
வணங்கினர்-மனமிணங்கினர்-நின்றுதயங்கினர்
மெய்யாகவே அந்தத் துய்யன் சேவடியை
தொழுதாரே நின்று அழுதாரே

இட்ட ஆசனத்தில் வட்ட கெருடன்விட்டு
யிரங்கினர்—பார்த்துமயங்கினர்-கொஞ்சம்தயங்கினர்
துஷ்ட தனங்கள்செய்தால் பதஷ்டமுள்ளசாபம்
வருகுமே தான் பெருகுமே.

## 8-வது கட்டம்.

(தருமர் மாம்பழத்தின் வரலாற்றை ஸ்ரீ கிருஷ்ணபகவானிடம் கூறுதலும் பதிலுரைப்பதும்.)

(சதிரமாரி இந்திரனும் - மெட்டு.)

கண்ணனே மணிவண்ணனே காருமேசம் பன்னனே
காருமேசம் பன்னனே கனியதைப்பார் முன்னமே
பொல்லாத தம்பிகள்கூட பிறந்தகெட்ட பாவியாம்
எல்லாமறிந்து மிப்படி யேன்செய்தார்கள் சொல்படி
ஆருண்ணும் மாங்கனியிதோ அறியேனே யென்மாயனே
காருமேயிதுசமயமே காளிங்க நிர்த்தன நேயனே
உம்மையழைத்தால் தெரியுமென்று உறக்கக்கூவி யழைத்தேனே
நன்மைசெய்யத் தருணமே நாயகாவிபரம் சொல்லுமே.

## 9-வது கட்டம்.

(ஸ்ரீகிருஷ்ணபகவான் பயங்காட்டி மனஞ்சோதிப்பது.)

வாசுதேவனே - மெட்டு.

என்னசெய்வது இனியேதுசெய்வது
முன்னேசெய்திட்ட வினைகளாகுமே
தபசில்சிறந்தோர் சயிந்தவரிஷி
தபத்தைவிட்டுமே தானேயுண்ணுவார்
நூறுவருஷம் தபத்திலிருந்துமே
கோரும்நற்கனி மாம்பழந்தானே
அந்தரிஷியும் வாரநேரமே
இந்தவனத்தில் இப்போதுதானே
கொல்லநினைப்பார் குடிகேடுவந்திடும்
கல்லாய்மண்ணாகக் கடுகிசபிப்பாரே
இந்நாள்பிழைத்து இறந்திடநாளோ
மன்னன்திரியனால் மாளாமலிருந்தீரே
என்னையழைத்தீர்கள் இந்ததொல்லைக்கோ
என்னசெய்குவேன் இப்போதேதர்மரே.

## 10-வது கட்டம்.

(தருமர் புலம்பல்)

ஆரே சையா-மெட்டு.

மாயவனே மாபாவியுடன்பிறந்து
மடியலானேனே. (மாய)

உபாயநீர் செய்தவையு மையா
உம்பாதமே கதியே நான்
முன்செய்த விதியே எந்தன்
அன்புள்ள பதியே
என்னிடம் சொல்லாமல் வந்து
இப்படி செய்தாரே ஐயா (மாய)

ஆரைசத மென்பே னையா
பாரையளந்த மெய்யா என்னை
பாருமருளுந் துய்யா உம்மைக்
கோரினேன் சங்கு கையா
அண்டினவர் பாண்டவர்கள்
எண்டிசையுங் கொண்டாடுங் கண்ணா (மாய)

## 11-வது கட்டம்.

(ஸ்ரீகிருஷ்ணபகவான் தருமர் மனதை சோதிப்பது.)

ஸ்ரீராமசந்திரனே-மெட்டு.

ஐவருக்கும் மூத்தவரே அன்புள்ள பெரியவரே
அருமையான தருமரே கேள் கேள் கேள்
ஆயிந்த மாங்கனி யேகிட

வஞ்சனை செய்யாமலே மனக்கவலையைவிட்டு
நெஞ்சில் நினைந்தபடி சொல் சொல் சொல்
விழுந்த இக்கனி பற்றிட

உண்மையை யுரைக்காவிடி லொட்டாது இந்தப்பழம்
யோசித்துச் சீக்கிரம் நீர் கூர் கூர் கூர்
ஓதுவீர் உண்மையை யிப்போதே.

## 12-வது கட்டம்.

(தருமர் தன் மனதிலுள்ள உண்மையைச் சொல்வது.)

காங்கிரேஜீ - மெட்டு.

மாயவரே சொல்வேன் கேளும் மனதிலுள்ளதை
மனதிலுள்ளதை என் னினைவிலுள்ளதை
பெரியதந்தை பெற்றெடுத்த பிள்ளை துரியன்
அரியதம்பிகளுடன் ஆள உரியன் (மாய)

இராச்சியத்தை யொற்றுமையாய் நாங்க ளாளவே
நாடெங்கும் பெருமையாக வாழ்த்திக் கொள்ளவே
யென்றனினை வேறொழிப யினியொன்று மில்லை
இருநதபழம் இருநூறு யோசனை செல்ல (மாய)

## 13-வது கட்டம்.

(ஸ்ரீகிருஷ்ணபகவான் வீமன்மனதை சோதிப்பது.)

பாளைவாய் கமுகில் வந்தூர் - மெட்டு.

மதகரி வீமனேயுன் மனதில் நினைந்தஅதை
மாற்றுமல் மொழிந்திடுவா யிங்ஙனம் காம்பு
அற்றமாம் பழம்செல்லுமே யங்ஙனம்

கண்ணனே யென் எண்ணமதை யின்னதென்று சொல்கிறேன்கேள்
மன்னன்திரி யோதிரன் தன்னையும் இந்த
இன்னும்நூற் றொருவர்கள் பின்னையும்

போருசெய்து தான்கெலித்து பொய்யன் சகுனிமுதல்
கோரியே எமலோகத்தில் சேர்த்துமே கை
வாரியே உதிரமுண்ணப் பார்த்துமே

திரௌபதை துகில்களைந்த துர்ச்சாதனன் மார்பிளந்து
வறையது முடித்துக்கொள்வ தென்றுமே யதை
அறைகுவே னென்னெண்ணமது மின்றுமே

அஸ்தினு புரத்தைதானும் அண்ணனுக்கு முடிசூட்டி
யாளவேணு மென்றுயெண்ணி யிருந்தோமே பழம்
மேலேநானூர் போசனை பறந்ததே.

## 14-வது கட்டம்.

(ஸ்ரீகிருஷ்ணபகவான் அர்ச்சுனன் மனதை சோதிப்பது.)

மாங்குஞ்சரியா - மெட்டு.

மாயவனே கேள் மாயவனே கேள்
மனதி லிருக்கும் மந்தன் மர்மமதை சொல்லுவேன் (மாய)

உபாயமுடன் கர்ணன் சகுனிதன்னை நானும் கொன்றுமே
உலகமதை அண்ணனுக்கு முடிசூட்ட வேணுமே
கலகமின்றிநான் பணிந்திருக்க தானுமே
என்மனதி லொன்று மில்லையே
யேதுங்கனி அறுநூர் யோசனை
எண்ணமிதுவே எண்ணமிதுவே (மாய)

## 15-வது கட்டம்.

(ஸ்ரீகிருஷ்ணபகவான் நகுலன் மனதை சோதிப்பது.)

மகாவதிகுணமாதரே - மெட்டு.

நாமமுடியோனே நகுலாநீகேள்
நானுரைமொழியை நலமாயுரைப்பாய்
நேமமுடனே நெஞ்சிலுற்றதை
நீதியாய் சொன்னு லேகிடுமே

(நகுலன் பதிலுரைப்பது.)

ஆயனே மாயனே ஆண்டவா கேட்பாய்
அறிவிப்பேன் நெஞ்சினில் யான்மொழியை
உபாய முடனே துரியோதிரன் படையை
உருட்டிட வழியை உற்றதுவே

அண்ணனுக்குமுடி அஸ்திஒபுரியை
அகத்தியஞ்சூட்டி யடியணிந்திருக்க
என்மனதுள்ளது யிதுவே சுவாமி
யேகிடும் பழமும் எண்ணூறு யோசனே.

## 16-வது கட்டம்.

(ஸ்ரீகிருஷ்ணபகவான் சகாதேவன் மனதை சோதிப்பது.)

கல்லாக்கும் - மெட்டு.

தாமமுடியானே சகாதேவனேநான் சொல்வதைக்கேள்
தாமதமின்றியேயுந்தன் தானினைவை யிங்குசொல்வாய்

(சகாதேவன் சொல்வது.)

எம்பெருமானேயுன்னடி யென்சிறமதிலேவைத்து
அம்புவியில் தரியன்படை யழிப்பதென்றே யெண்ணமும்
பெரிய அண்ணனுக்குமுடி பெருமையுடன்சூட்டி யிந்த
அருமையுள்ள அஸ்தினவை யாளும்படி செய்வீ ரையா
என்மனதிலுள்ளதிது யிதுதவிர வேறுமில்லை
இந்தமாம்பழமேகிய யோசனை தொலாயிரமே.

## 17-வது கட்டம்.

(ஸ்ரீகிருஷ்ணபகவான் துரௌபதை மனதை சோதிப்பது.)

ஜப்ததக்குலந்தரு - மெட்டு.

பாஞ்சாலன்பெற்ற பாங்கிளியேநீ
பண்மையுட னுண்மைசொல்வாயே
வாஞ்சைகள் காட்டி வஞ்சகஞ் செய்யாமல்
வழுத்துவாய் உந்தன் நினைவையெல்லாம்
அம்மாபத்திநி பாஞ்சாலியேநீ சொல்வாயே
சம்மாநித்திய குணசாலியே
உத்தமியே பத்தனாலில் நத்தியுதித்த (பாஞ்)

(திரௌபதை சொல்வது.)

அண்ணா கண்ணா மணிவண்ணா நான்
நண்ணா சொல்வேன் சம்பன்னா
யிந்நா ளெண்ண மெல்லா மெடுத்து
யியம்புவேன் கேள் முன்னமே
திரியோதிரன் படையை வதைசெய்துமே
தீரனவர் மார்பிலேறி
தீர்க்கமுடன் கூந்தலைநான் முடிக்க வெண்ணம்(அண்)

நல்லெண்ணை யாகவே கலங்கிட வுதிரத்தை
வல்லவ னெலும்பை சீப்பாக்கி
எல்லாருமறிய வாரி கூந்தல்முடித்து
என்சபதமதை முடிப்பேனே
உள்ளது இதவேயாகும் உறுதியாகவே
யுண்மை யிதுதானே
ஒட்டவோடின மாம்பழமுதிர்ந்துவிழ (அன்)

## 18-வது கட்டம்.

(மாம்பழம் பூமியில் விழ ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்வது.)

மஞ்சுநிகர் குந்தளமின்னே — மெட்டு.

ஒட்டின மாம்பழமிதுவே யுதிர்ந்துமே
பூமியில் யோடிவந்து தான்விழுந்துமே
உண்மை யுரைக்காமல் யென்னையேமாற்றி தீமைசெய்ததால்
உள்ளது சொல்லுவாய் அம்மணி யினிதானும்
யொருமுறை யொட்டிடும் இம்மாம்பழந்தானே. (ஒட்)

## 19-வது கட்டம்.

(ஸ்ரீகிருஷ்ணபகவான் மறுபடியும் திரௌபதை மனதை சோதிப்பது.)

வெள்ளிமலையொத்த - மெட்டு.

கண்ணு முகில் வண்ணு அண்ணு யென்னை
காருமிது சமையஞ் சம்பன்னு நான்
முன்னுளில் நினைந்தவகை பெண்ணுளு முரைப்பேன்
எந்தனையா சங்குகையா

அறக்கு மாளிகைதனில் ஐயோ இந்த
ஐவரிறந்தார்களென்ற பொய்யோ
அவனிமுத லுள்ளோர்கூறக் கவனித்து எந்தன்தந்தை
தானே சொல்லு வேனே

என்னுடன் பிறந்த வில்லை வளைத்தால் இப்போ
தீருவேன் பெண்ணையெனக் களைத்தார்
ஏகமாய் ராஜராஜர்கள் விவாகமுஞ் செய்ப
அங்குவந்தார் குந்தியிருந்தார்

விஜயரும் பிராமணர் போல அங்கு
வீற்றிருந்தா ரந்தசபை தாள
வில்வளைக்க வேந்தர்களும் துள்ளிதுள்ளி யோடிவந்தார்
வெகுபேர் அதில் ஒருபேர்

கர்ணனென்னும் பேருடைய ராஜன்
சணைவில் வளைத்து நாணியைக்கொண்டேசன்
கண்டுமே யிவர்நாயக னென்றுமே யெண்ணினது
உண்டு நான் அன்று

வேறுமொழி நானறியேன் சாமி தம்மை
வேண்டியே யிங்கிருப்போம் பூமி
வேகமுடன் மாம்பழமும் விண்ணிலே பொருந்திகொள்ள
ஆச்சே வினை போச்சே

பாண்டவர்க்கு புத்திசொல்லி சென்றார் வந்த
பாலவனம் விட்டுசெல்லு மென்றார் இந்த
பஞ்சவரே சென்றுவாரேன் பஞ்சாவனம் விட்டுபேகும்
ஜெயமே தர்ம ஜெயமே.

## 20-வது கட்டம்.

(மங்களம்.)

மாறேத்துறெகுவாலா - மெட்டு.

மங்களம் ஜெய மங்களம்
மாதவனுக்கு ஜெய (மங்)

எங்கும் நிறைந்த பொருள் ஏழைக்கெங்காளு மருள்
திங்கள் வதனமும் ஜெயஜெய ஜெயவென (மங்)

பாண்டவர்க்கும் பாஞ்சாலிக்கும் படித்துவரும் பெண்களுக்கும்
வேண்டியே யாதவவேள் வினையறியா அம்புஜஞ்சொல் (மங்)

சம்பூர்ணம்.



Printed at the B. V B. Press, Choolai, Madras.—1915.

# அறிவிப்பு.



இதனுல் அனைவர்க்கும் அறிவிப்பது யாதெனில், இதிற் கண்டுள்ள புத்தகங்களும், இன்னும் வேண்டிய எல்லாவித புத்தகங்களும் வேண்டிடவர்கள் அடியிற்கண்ட விலாசதாரிடத்தில் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| பஞ்சரத்நத் திருப்புகழ் மூலமும் உரையும் | 0 | 3 | 0 |
| இராமாயண திருப்புகழ்க் காவடிச்சிந்து | 0 | 2 | 0 |
| உப்புமா பாட்டு | 0 | 1 | 0 |
| மாம்பழக்கொம்மி | 0 | 1 | 0 |
| இட்டலிக்கும் உப்புமாவுக்குஞ் சண்டை | 0 | 1 | 0 |

மேல் விலாசம் ;

பெ. ஆறுமுக முதலியார்,
நெ. 4, 2-வது சந்து,
பெருமாள்கோயில் தோட்டம்,
சவுகார்பேட்டை போஸ்ட், மதருஸ்.